**திரு. எஸ். கே. சம்பந்தன் :** கதர் உற்பத்தித் தொழிலில் ஈடு பட்டுள்ள மக்களின் எண்ணிக்கை என்ன என்பதை அமைச்சர் அவர்கள் சொல்வார்களா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** இந்தக் கேள்வியில் அதற்கு விவரமில்லை.

SRI K. S. ABDUL WAHAB : May I know the number of shops in which Khadi is sold in our State ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** அந்தத் தகவல் என்னிடமில்லை.

**திரு. க. அன்பழகன் :** தலைவர் அவர்களே, 1963-64-ல் உற்பத்தி செய்யப்பட்ட 127 லட்சம் ரூபாய் அளவு மதிப்புள்ள கதரில் இது வரையில் எவ்வளவு விற்பனையாகியிருக்கிறது ? எவ்வளவு தேங்கி யிருக்கிறது ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** சார், அந்தத் தகவல் என்னிடமில்லை.

### *Co-operative Farms*

3-20 p.m. * **120 Q.**—DR. H. V. HANDE : Will the Hon. the Minister for Co-operation be pleased to state with reference to the answer given to Legislative Council Question No. 121 on 8th March 1965 :—

(*a*) the total acreage brought under co-operative farms in Tamilnad;

(*b*) the total yield of paddy from co-operative farms :

(*c*) whether there has been any substantial increase in yield on account of co-operative farms; and

(*d*) the basis on which forms are brought under the co-operative farm scheme ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** (அ) தமிழ்நாட்டில் 42,914 ஏக்கர் 92 சென்ட் நிலம் பல்வேறு வகைக் கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களின்கீழ்க் கொண்டுவரப்பட்டுள்ளது.

(இ) 1,12,415 குவிண்டல் (ஒரு லட்சத்து பன்னிரண்டாயிரத்து நானூற்றுப் பதினைந்து குவிண்டல்) நெல் விளைந்தது. அதன் மதிப்பு ரூ. 36,29,306 (முப்பத்தாறு லட்சத்து இருபத்தொன்பதாயிரத்து முன்னூற்று ஆறு ரூபாய் மட்டும்) ஆகும்.

(உ) கூட்டுறவுப் பண்ணையின்கீழ்க் கொண்டுவரப்பட்ட நிலங்களிலிருந்து கிடைத்த விளைச்சல், அவை அவ்வாறு கூட்டுறவுப் பண்ணையின்கீழ் கொண்டுவரப்படுவதற்கு முன்பு அவற்றில் கிடைத்த விளைச்சலைவிட அதிகமாகவே இருந்தது.

(எ) தனித்தனி பட்டாதார்களின் பட்டா நிலங்களை ஒருங்கு சேர்ப்பதன்மூலம் கூட்டுப் பண்ணைச் சங்கங்கள் அமைக்கப்படுகின்றன. பட்டாதார்கள் அவற்றில் அங்கத்தினர்களாகச்

சேர்த்துக்கொள்ளப்படுகிறார்கள். அங்கத்தினர்கள் ஒருங்கு திரட்டிய நிலங்களுடைய மதிப்பின் விகிதாசாரப்படி அவர்களுக்கு நிலப்பங்கீடு கொடுக்கப்படுகிறது. மேலும் அவர்கள், ஈட்டுகிற ஊதியத்தின் அடிப்படையில் போனஸ் தொகையையும் அவர்கள் பெறுவர். தொகுப்புப் பண்ணைச் சங்கங்கள் அரசாங்கத் தரிசு நிலங்களில் அமைக்கப்படுகின்றன. அந்த நிலங்கள் அச் சங்கங்களுக்குச் சொந்தமாகிவிடும். நிலமில்லாத தொழிலாளிகள் அவற்றில் அங்கத்தினர்களாகச் சேர்க்கப்படுகிறார்கள். அவர்கள் செய்யும் வேலைக்கேற்பக் கூலி வழங்கப்படுகிறது. கிராமதான நிலங்களில் அமைக்கப்படும் சங்கங்களைப் பொறுத்தவரையில், அங்கத்தினர்கள் இச் சங்கங்களுக்குத் தங்கள் நிலங்களைத் தானமாகக் கொடுத்துள்ளார்கள். இச்சங்கங்களின் துணை விதிகளை அனுசரித்து, அங்கத்தினர்கள் கூட்டாகவோ அல்லது தொகுதிகளிலோ அல்லது தனித்தனியாகவோ இந்த நிலங்களைச் சாகுபடி செய்கிறார்கள்.

நிலக் குடியேற்றச் சங்கங்கள் அரசாங்கத் தரிசு நிலங்களில் அமைக்கப்படுகின்றன. அந்த நிலங்கள் அச் சங்கங்களுக்குச் சொந்தமாகிவிடும். அந்த நிலங்கள் சுமார் 4 அல்லது 5 ஏக்கர் கொண்ட நிலத் தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, அங்கத்தினர்கள் தனித்தனியாகச் சாகுபடி செய்வதற்கென அவர்களுக்கு வழங்கப்படுகின்றன.

குத்தகைக்காரர் பண்ணைச் சங்கங்கள் பொது டிரஸ்டு நிலங்களில் அமைக்கப்படுகின்றன. அவற்றில் சாகுபடி செய்யும் குத்தகைக்காரர்கள் அங்கத்தினர்களாயிருப்பார்கள். இச் சங்கங்கள் பொது டிரஸ்டுகளிடமிருந்து நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு, அங்கத்தினர்கள் தனித்தனியாகச் சாகுபடி செய்வதற்காக அவர்களுக்குப் பிரித்துக் கொடுக்கின்றன. மேலும், அவை, பொது டிரஸ்டுகள் குறிப்பிடுகிற குத்தகைத் தொகைகளை அங்கத்தினர்களிடமிருந்து வசூலித்து அவற்றை டிரஸ்டுகளிடம் செலுத்துகின்றன.

**திரு. கே. பாலசுப்ரமணிய அய்யர்** : கூட்டுறவுப் பண்ணையில் இருந்து விவசாயம் செய்வதற்கு விவசாயிகள் நிலம் கொடுக்கிறார்கள். பண்ணையிலிருந்து திருப்பிக்கொடுக்கும் போது அவர்கள் கொடுத்த நிலத்தைக் கொடுக்கிறார்களா வேறு ஏதாவது நிலம் கொடுக்கப்படுகிறதா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார்** : அவர்கள் எல்லாம் ஜாயிண்ட் பட்டாவாக இருக்கிறார்கள். ஒன்றுசேர்ந்து கூட்டுப் பண்ணை வைத்து சாகுபடி செய்கிறார்கள். திருப்பிக் கொடுக்கும் போது அவர்களுடைய நிலம் அவர்களுக்கே கொடுக்கப்படும்.

**DR. H. V. HANDE** : In his statement the Hon. Minister has stated that the results are encouraging. In view of the encouraging results, with the Hon. Minister try to bring in more acres under the co-operative farming?

[12th August 1965

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** சார், இப்போது நடந்துவருகிற கூட்டுறவு பண்ணைகள் நல்ல ஒழுங்கான முறையில் நடத்த ஏற்பாடு செய்துவிட்டு, அடுத்து யோசனை செய்யவேண்டுமென்று சமீபத்தில் முதலமைச்சர் தலைமையில் கூடி யோசித்தோம். ஆகையால் இனிமேல் நல்லமுறையில் இருப்பதை நடத்துவதென்றும் புதிதாக நடத்த பிறகு முயற்சி எடுத்துக் கொள்ளலாமென்றும் இருக்கிறது.

**திரு. வி. கே. ராமசாமி முதலியார் :** இவைகள் எல்லாம் லாபத்தில் வேலை செய்கிறதா ? நஷ்டத்தில் வேலை செய்கிறதா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** சார், நான் என்னுடைய முதல் கேள்விக்கு அளித்த பதிலில் தெளிவாகச் சொன்னேன். உற்சாகமாக வேலை செய்தால் இன்னும் லாபம் கிடைக்கும்.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** கூட்டுறவு விவசாய சங்கங்களுக்கு எந்தெந்த மாதிரியான உதவிகள் அரசாங்கம் அளிக்கிறது ? சாதாரண விவசாயிகளுக்கு கிடைப்பதைவிட வேறு தனிப்பட்ட சலுகைகளோ, கடன்களோ கொடுக்கப்படுகின்றனவா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** சார், இந்த கூட்டுறவு பண்ணைகள் இரண்டு மூன்று வகைகளாக இருக்கின்றன. எருதுகள் வாங்க, உழுவதற்கு கலப்பை முதலியன வாங்க, கிணறுகள் வெட்டுவதற்காக, இன்னும் உழவுக்கான சாதனங்களையெல்லாம் வாங்குவதற்குத்தான் அவர்களுக்குக் கடன் கொடுக்கப்படுகிறது.

**திரு. என். ஆர். தியாகராஜன் :** இந்த கூட்டுறவு பண்ணைகள் லாபமும் இல்லாமல் நஷ்டமும் இல்லாமல் நல்லமுறையில் நடப்பதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளப்படுமா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** சார், பொதுவாகவே எந்த தொழிலிலும் லாபம் வேண்டுமென்றுதான் கருதுவார்கள். கூட்டுறவுப் பண்ணையில் போடுகிற தொகை நல்லமுறையில் விளைய வேண்டுமென்ற கருத்தோடுதான் செய்யப்படுகிறது.

**DR. H. V. HANDE :** On the 8th March 1965 when the Hon. Minister gave his answer to a similar question. he said the results were not encouraging. But now in answer to the present question the Hon. Minister says the results are encouraging. Are not these answers contradictory?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** சில இடங்களில் நல்ல நிலமாக இருந்தால் நல்ல விளைச்சல் வருகிறது. இன்னும் சில இடங்களில் குறைவாக இருக்கிறது. மொத்தத்தில் பார்த்தால் வேலை செய்வதைப் பொருத்துத்தான் கிடைக்கிறது. எவ்வளவு என்ற விவரம் இல்லை. புதிதாக அமைக்கவேண்டாமென்று முடிவு செய்திருக்கிறோம்.